உ

கான ரஸ

# திருவருட் கீதங்கள்

(முதலாம் பாகம்)



புவனங்கள் ஈன்ற பொற்பாவை திருமுலைப் பாலருந்தி,
சரவணப் பூந்தொட்டிலேறி, அறுவர் கொங்கைவிரும்பி,
கடலழக் குன்றழச் சூர்முதல் தடிந்து சிறைச்சேவல்
கொண்ட குறிஞ்சிக் கிழவன் திவ்ய பாத தாமரைகளில்
இந்நூலைச் சமர்ப்பிக்கின்றேன்.




ஆக்கியோன்

**மு. செல்வன்**



கர ௵ சித்திரைத்திங்கள்

1951




# முகவுரை

"முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்" ஆன தென்கோண மாமலைத் தேவாதிதேவன் பாதார விந்தங்களே தஞ்சமென நம்பி வாழும் அடியார்க்கும் அடியேனாகிய யான் வெளியிடும் "திருவருட்கீதங்கள்" என்னும் இச்சிறு நூல் பதினாறு பாடல்களால் பொலிவுற்று விளங்குகின்றது. இஃது இந்நூலின் முதலாம் பகுதியாகும். பக்தி பரவச மேலீட்டினால் பாடிய இப் பாடல்கள் விநாயகன், பார்வதி, பரமேஸ்வரன், கதிரமலைக்கந்தன், நாராயணன் என்னும் கடவுள்கள் மீது அவ்வக் காலத்து வெளிவந்த வர்ண மெட்டுகளிற் பாடித் தொகுக்கப்பெற்றவையாகும். இதேபோல முன்னரும் ஐந்து தொகுதிகள் வெளியிடப்பட்டு இருக்கின்றன. கடைசியாக 1940-ல் வெளியிடப்பட்டது "தேவஞானகானம்" என்னும் நூலாகும். கடந்த 10 வருடகாலத்திலும் முன்னர் செய்து வந்த தொண்டைத் தொடர்பாகச் செய்ய, சந்தர்ப்பம் கிடையாததையிட்டு மிகவும் விசனிக்கின்றேன்.

அடியேன் ஆக்கிய நூல்கள் சிறந்தனவன்றி இருப்பினும் மெய்யன்பர்கள் பெரிதும் விரும்பிப்பெற்று என்னை உற்சாகப் படுத்திய தன்மையினால் இந்நூலையும் வெளியிடத்துணிந்துள்ளேன். கூடிய அளவு கவனம் எடுத்து இதனைப் பார்வையிட்டுள்ளேன். இருந்தும்; குற்றம் இருப்பின் மன்னித்துக் கொள்ளுமாறு கற்றறிந்தவர்களாகிய உங்களைத் தாழ்மையுடன் வேண்டுகின்றேன்.

இந்நூலை வெளியிடுவதில் எனக்குதவி புரிந்த அன்பர்களுக்கும்; எனது வேண்டுதற்கிணைய குறுகியகால எல்லையுள் அச்சிட்டு உதவிய கொம்மேஷல் பிறெஸ் மானேஜர் அவர்களுக்கும் நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன்.

"மொழிக்குத்துணை முருகா எனும் நாமம்"

மூளாய்
11-4-51

ஆக்கியோன்

சிவமயம்

## வெண்பா

சீராரும் தென் கதிரைச் செவ்வேள்மேற் கீதங்கள்
நேராக வோதி நிகழ்த்திடவே — ஏராரும்
ஓரானை மாமுகனே உள்ளந் தனிலிருந்து
காராயுன் பொற்பாதம் காப்பு.

## 1

இராகம்: ரவிச்சந்ரா தாளம்: ஆதி

பல்லவி

ஐங்கரா வரா அரனார் சுதா
அன்புடன் வந்தென் துன்பந் தீர்த்தருள் —ஐங்கரா

அநுபல்லவி

நிதம் நின்திருப் புகழ் மோட்சமாம்
நித்திய மூஷிக வாகன ஓங்காரா —ஐங்கரா

சரணம்

பின்னையுமிப்பாரில் பிறவா வரம் தா
மந்திர மூலபாதம் புயம் பணிந்தேனே
உறவிருந்தென் செய்வார் உயிர்த்துணை நீ
உம்பர் வேண்டும் ஈசா கும்பளாவளைவாசா —ஐங்கரா

## 2

இன்னமும் பாராமுகம் எ. மெ.

பல்லவி

சண்முகம் தோணுவிதம் ஏனையா —மாயச்
சடம் திடிப்பதைப் பாரையா ஐயா —சண்முகம்

அநுபல்லவி

மண்ணுண்ணவோ வுடம்பை மாறுண்டோ மனதில்
மால்மருகா வேல்முருகா மாயமிதாமோ —சண்முகம்

சரணம்

ஆறிரண்டு கண்கள் காணுவேனோ என்முன்
மூவிரண்டு சிரம் வேணுவேனோ
கூறு செய் மெய்வேல் மயிலவனே சூராதியைக்
கூறு செய் மெய்வேல் மயிலவனே
தேவி தெய்வ யானைவள்ளி மானின் மணக்காதலனே -ச.

## 3

ஆசை கொள்ளும் மீசையுள்ள எ. மெ.

**பல்லவி**

மூளைவிட்டும் ஏழை பட்ட
பாட்டைக் கொஞ்சம் கேட்பையா—திருப்
பாட்டைக் கொஞ்சம் கேட்பையா

**அநுபல்லவி**

குண பேதம் தானையா சணவாதம் தானையா
குலம் தானையா கெட்ட கனம் தானையா தாரில்
தனித் தேனையா பாரில் —மூளை விட்டும்

**சரணத் தொடர்**

இனத்தோரில் ஆர் சொந்தம் தனத்தைக் காப்பாரையா
பிணக்காடுஞ் சேர்க்கார் ஐயா பெற்றோர் என்றும் பார்க்காரையா
பிறரைப் புகழ்ந்து போற்றி உறரையிகழ்வாரையா—மூளை விட்டும்

வஞ்ச மனம் போலவாழ்வு நெஞ்சிரக்கமேதையா
காற்றில் தூற்றிவிடும் தூசையா மாற்றிப் பிறப்பாரையா
கொடையாளன் யாரையா பணப் பித்தம் தானையா
கடை கெட்ட வாழ்வையா

கெட்டித்தனப் பேச்சுப் பேசும் துட்டர்களைப் பார்த்தையா
இவர் கஷ்டந்தனைத் தீர்ப்பையா
படுந் தட்டுப்பாட்டைக் கார்ப்பையா
மண்ணுண்ணும் பாண்டம் கண்டும் மல்யுத்தம் செய்யலாமோ—மூ

## 4

நீதானல்லாமல் துணையார் எ, மெ.

**பல்லவி**

இந்த நா யேனென் நேரில் வருவாய் — கிஷ்ணு— நாயேன்
என் சீதா பிரானும் நீயே — கிஷ்ணு — நாயேன்

**அநுபல்லவி**

நோயான காயம் நிலையோ — அநித்யம்
நோயான காயம் நிலையோ
நித்யம் நினது திருவடிமலரில் மூழ்கினேனே —நாயேன்

**சரணம்**

உறக்கமில்லாத் துக்கத்தாலே உள்ளம்
உருகுதென் செய்குவேன் யார் சூதோ
துறவி வெளியை அருளே — கிஷ்ணு
துறவி வெளியை அருளே — நிதமும்
துயரமடையுமடியன் மாய்கைகள் மறைந்திட — நாயேன்

## 5

நீராத விளையாட்டு எ. மெ.

### பல்லவி

மூவாசை வசை வூட்டுந் தொல்லை
முன்பின் மதியிலாச் செய்கையால் மீளாதவல்லை —மூவாசை

### அநுபல்லவி

மண் பெண் தனம் என்று மகிழ்வார்
மாய பந்தத்தில் வீழ்ந்து பொய்க்கூட்டைப் புகழ்வார்
உண்மைக்கோர் அழிவுண்டோ வென்பார் — உலகோர்
உண்மைக்கோர் அழிவுண்டோ வென்பார் — இதை
எண்ணிக் கணித்துத் தணித்துப் பணிக்கார் —மூவாசை

### சரணத்தொடர்

அறிவற்ற செயல் செய்கை செய்தே முன்பின்
அழிவதும் கண்டு பொய் மெய்மை மாற்றிக்கள்
வெறியிலே தூற்றி முற் செல்வம் முன்பின்
பிறவிக்கு வழிதேடி விழலுக் கிறைப்பார் —மூவாசை

புல்லரின் பின் பற்ற விடுத்து பல
அல்லல் அடைந்து முன்னோர் சொல் தடுத்து
இல்லேன் இருந்தேன் இப்புவியில் அழியும
தேகம் எடுத்தேன் இரக்கத் துணிந்தேன் —மூவாசை

பொல்லாக் குணம் போக்க அறியேன் — முன்பின்
செல்வம் எல்லாம் இழந்தபின்னும் என்னைக் குறியேன்
தன்னால் வராப் பிழைகள் உண்டோ தாரில்
பொன்னன மேனி மண்ணுண்டாரிருந்தார் —மூவாசை

## 6

சந்ரோதயம் அதிலே எ. மெ.

### பல்லவி

என்றோ சுகம் அறியேன் காலனுயிர்
உண்பான் உடல் அவே பேரின்பம் —என்றோ

அநுபல்லவி

என்போலும் யார் பிறந்தார் யாதுமிழந்
தென்போலும் யார் பிறந்தார் பூவுலகில்
துன்பம் நிறைந்த கூட்டுக்கின்பக்கதி கிடைப்பதென்றோ —என்

சரணத்தோடர்

வேண்டுந் திரு மலையிலே — வானோர்
வேண்டும் திரு மலையிலே ஆண்டருளும்
மாண்டோர் உயிரும் பின்னே
மீண்டும் வருவதுண்டோ வேண்டும் திருமலையிலே —என்

வாழ்ந்த திது வரையிலும் — போதும்
வாழ்ந்த திது வரையிலும் சரணகதி
வேண்டும் பதவிதன்னை ஈந்தாள் இறைநீ பின்னே —என்றோ

## 7

ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே

பல்லவி

காணுவேனோ கண்டும் வேணுவேனோ
காலன் கை கவர்முன்னம் கலந்துகொள் வேலன்பைக்—காணு

அநுபல்லவி

துன்பம் மிகுந்ததால் இன்பம் மேற் கொண்டு
தின முன் பாதம் துணைநம்பி மன துவந்து
முன்பு வந்தால் முத்தி மோட்சமாமே — நித்திய
கானவர்க்குகந்த இன்பக் காட்சியாமே —காணு

சரணத்தோடர்

அரனுக்கும் அயனுக்கும் மந்திரம் கற்றாய் — மாயக்
கண்ணபிரான் மருகோனாய் விண்ணோரைக் காத்தாய்
பரன் நெற்றிக்கண் பார்க்கப் பாரந் தீர்த்தாய் — பால
சண்முகம் துலங்க மயில் சேவல் ஏற்றாய் —காணு

தேனிருக்கும் காடுமலை தேடி நடந்தாய்
தினைப்புனத்தில் வள்ளியை மணம் செய்து மகிழ்ந்தாய்,
கானவர்க்கு கந்த கதிர் மலை தொடர்ந்தாய்
கதிர் காமமருந்தே கடையன் கண்முன்வாராய் —காணு

## 8

பூங்குயில் கூவும் எ. மெ.

பல்லவி

நீர்க்குமிழ் போன்றவிக் காயமுமழிமுன்
நீ உயிர்தானே மாயமான் கண்டாய் —நீர்

அநுபல்லவி

தென்புல யமனின் வஞ்சனை என்ன
கஞ்சனை முன்னை துஞ்சிட வதைத்தவா
நின்னருளாலே துறந்தேன் —நீர்

சரணத்தொடர்

கலியுக முடிவில் அதிசயம் பார்த்தாய்
கோவின் தயவால் தர்மக்கண் கார்த்தாய்
சாரதி ஆசையால் நரன் துணை சேர்த்தாய்
திரியனின் பெருமை தீர்த்தாய் —நீர்
தூது போய் விதுரன் வீட்டுள் நுழைந்தாய்
தர்ம குணாளன் ஊட்டி மகிழ்ந்தான்
தீதுசெய் தானுன் சூதறியாமல்
துடை முறிந்தான் வீமன் தண்டால் —நீர்

## 9

டடடாம் டடடாம் எ. மெ.

**தொகையரு** தினம் தேகம் நோகலாகுமா
தேவா நின் தியானம் போகுமா

**பாட்டு** பெண் மண் பொன்னைப் பாழாக்கினன்
பின்னால் பேதப் பட்டாட் டுறன்,

**பல்லவி** தன்னனும் தன்னனும் தன்னனும் தன்னனும்
தன்னனும் தன்னனும் தன்னும் நன்னும்

**பாட்டு** வாய் மதம் பேசுதல் அழகிலை
வாத பேத கோள்சொல் அழகிலை
நாய் போல் அலைந்தும் அறிவிலை
நோய் வாட்டி மெலிந்தும் அறிவிலை
தாய் ஊட்டி வளர்த்தும் அறிவிலை — வினையால்
நீதிக்கு மாற்றாய்க் குறைவதும்
நினைவு கனவு போல் கூற்றுவதும்

**தொகையரு** அருள் தாரும் ஆதி மூலனே
ஆறு முற் கோபம் மாறுமோ

பாட்டு பெண் மண் பொன்னைப் பாழாக்கினன்
பின்னால் பேதப் பட்டாட்டுறான் —தன்னன்னும்

பாட்டு துன்மதி மோசமாய்த் தூற்றுவதுர் ஆகுமோ
தன் மதி தன்னைக் காப்பதும்
நினைவு கனவுபோல் கூற்றுவதும்
வினையறுமல் வளியிலே
விண்ணவர் முதல்வனின் ஒளியிலே
மனை மக்களாலும புகழிலே
நாய் போல் அலைந்தும் அறிவிலே
நோய் வாட்டி மெலிந்தும் அறிவிலே
தாய் ஊட்டி வளர்த்தும் அறிவிலே வினையால்
நீதிக்கு மாற்றாய்க் குறைவதும்
நினைவு கனவு போல் கூற்றுவதும் —தன்னனும்

## 10

ஆண்டருள் ஜெகதம்பா எ. மெ.

பல்லவி

திருப் பாற் கடல் துயில் கொண்டால் நாயேன்
பதவி என்னமோ திருப் —பாற்

அநுபல்லவி

பாண்டவர் மெய்ப் பாதம் போற்றும்
பரம பாதம் வேண்டும் நாயேன்
பதவி என்னமோ திருப் —பாற்

சரணம்

புகழும் செல்வன் சாற்றும் சோதி
உலகம் காக்கும் நம் கடவுள் நீதி
பலதுமீன்ற நீயோ ஆதி
பாரதப் பிர்மமே நாயேன் பதவி என்னமோ திருப்—பூற்

## 11

செல்வமே சுக ஜீவாதாரம் எ. மெ.

பல்லவி

எந்தை நீ ஜெக தீசா காரும்
இகபர சுகந் தாரும் வாரும் —எந்தை

அநுபல்லவி

வந்த வளி சொந்தம் வாழ்வோர் கனவே
வெளி வர வேசேவல் வேல் மயில் நினைவே
முன்னாள் வினையும் மூக்குள்ள வரை
மாட்டும் சளிபோல் மாறு விதமேன் —எந்தை

சரணம்

யாதும் சூது மந்த மாயா பந்தம்
மாற்றுதேவிதி மதி முற் சாந்தம்
பேதம் செய்வதேன் நின் பாதம் சொந்தம்
பேறில் லேனிருந்தேனோ விப் பாந்தம் —எந்தை

## 12

நீயறிவாய் மனமே எ. மெ.

பல்லவி

யாதறியேன் துணைநீ என்ஈசா —யாதறியேன்

அநுபல்லவி

யானென் செய்தேனோ ஜீவ துரோகம்
கோமகள் சாட்சி பஞ்சாட்சர தியானம் —யாதறியேன்

சரணம்

1. நின் சித்தமிதோ நொந்தேன் முக்தி தந்தருளும்
மோசம் செய்யாதே நாயேன் யானே —யாதறியேன்

2. உயிரும் தமதே பூபதி ஈந்தாள்
ஆசைக்குள் மூழ்கும் இவ் வுடலேன்
ஆசைக்குள் மூழ்கும் இவ் வுடலேன்
ஆழி சூழும் இப்புவியினில் ஆர் துணை
அரு ளென்றும் கதி நீயே
திரு மலை நிதி நீயே என் ஈசா —யாதறியேன்

## 13

மோகனுங்க வதனி எ. மெ.

பல்லவி

யோக பாக்ய பதவி மெஞ்ஞான
யோக பாக்ய பதவி தன்னைத்
தாரும் பாக்யம் அருள் செய் மெய்ஞான —யோக

அநுபல்லவி

அசோதை தேவி சுதனு ஆ ஆ
அசோதை தேவி சுதனு
அறிவோ தருவதும் தாமரிதோ அறியேன்கார் —யோக

சரணம்

முன்னை வினை தீர்த்தருள் — உன்
எண்ணம் என்ன சேர்த்தருள்
மனை துறந்தே தவித்தேன் துணை நீ பார்
தூண் பிளந்தாய் மண்ணுள்
என் நுழைந்தாய் முன் —யோக

## 14

அவனியில் மானிடர் எ. மெ.

**பல்லவி**

கருணையில்லாதவர் நெஞ்சமோ
கனிவில்லையே கனிவில்லையே கனிவில்லையே —கருணை

| 2 |

**அநுபல்லவி**

கலங்கி அழுவார் காதலரே
பரன் தாள் பணியார் பூதலரே —கருணை

**சரணம்**

குரு மொழி குறியார் குணமும தோகதி
திரு வுள்ளம் பதியார் கருவழி யிதோ
பின்னையும் பிறந் திறப்பார் பாரில்
பின்னையும் பிறந் திறப்பார்
உறவிருந்தார் புண்ய பூபதி உயிர்தமதே
உயிர் தமதே உயிர் தமதே
மாருதி முன்னருள் கொண்டது போலென்றும்
அன்பு துறந்தருள் ஆகம மூலா
அடியன் நீ அணைந்தாள்
அடியன் நீ அணைந்தாள் —கருணை

## 15

சிதம்பர நாதா

**பல்லவி**

வருந்திட லாகா வரமருள் யோகா
வல் நோய் தீர்க்கும் தியாகா
வலிமிகு கால பயமதால் மனம் —வருந்திடல்

**அநுபல்லவி**

பரகதியும் நிதியும் மதியும்
புண்ணிய பரனே பண்ணியபடி ஈந்தாள் —வருந்திடல்

**சரணம்**

கன்று மானும் மழுவும் பூண்டோனே
கால மிதோசரி கண்டு கொண்டேனே
என்றும் வேதம் துதிசெய் மலைத்தேனே
ஈசா திருவடிக் கன்பு கொண்டேனே —வருந்திடல்

எங்கும் நிறைந்தாயே எ மெ

பல்லவி

இன்பம் தரும் தாயே உனை என்றும் மறந்தேனோ

அநுபல்லவி

முன் பின் உணரா மோசம் அடைந்தேனே
தியானம் தேனே மயானம் யாதோ —இன்ப

சரணம்

எவ்வுயிருமுன் நீ ஓர் தாய் இவ்வுயிரு முன்
இதை எண்ணுமல்
பின்னும் பிறவிக் கிடமோ ஆகாதே
பிரம்ம சொரூபி பிரம்ம சொரூபி பிரம்ம சொரூபி —இன்பம்

## விருத்தம்

ஆதியிலே திருமலையில் அடியவர்க்கு
அருள் அளித்த ஆனந்தத் தேனே யான்
பாதியிலே பதி யிழந்தும் அதி குதியால் நிதியிழந்தும்
கெதி கதியற் றலைந்தலைந்தும் தெருவில் நின்றும்
நீதியிலே நிறைந்த நித்ய நின்மலனே
நினது திருவடி மறவா நீசனென்னை
செக சோதியிலே கலந்து கொள்ளும்
திரு வருளுந் தந் தருளும் தேவ தேவே.



கொம்மேஷல் பிறெஸ் அன் ஸ்ரோர்ஸ், யாழ்ப்பாணம்.

ரெலிபோன்: **215**
தந்தி விலாசம்:
"கொம்மேஷல்"

# இதை
# வாசிக்க விரும்புகிறீர்களா?

அப்படியாயின் வாசியுங்கள்
அன்றேல் விட்டுவிடுங்கள்

**எங்களிடம்** பாடசாலைகள், கந்தோர்கள், நகரசபைகள்—சங்கங்கள் கிராமச்சங்கங்கள், ஐக்கியசங்கங்கள் என்பனவற்றிற்கும் மற்றும் பாவனைகளுக்கும் உபயோகிப்பதற்கு வேண்டிய சகலவிதமான — பலதினிசான — உபகரணங்கள் சகாயமான விலைக்குப் பெற்றுக்கொள்ளலாம்

ஆங்கிலம்-தமிழ்
## அச்சுவேலைகள்—புஸ்தகம் கட்டுவேலைகள்

பார்வைக்கு அழகாகவும், பூரண திருப்தியுடனும் குறைந்த சலாருடனும் நீண்டகால விசேஷ அனுபவமுடையவர்களைக் கொண்டு முடிப்பித்து குறித்தநேரமே கொடுப்போமென்பது யாவரும் அறிந்த விஷயமே

**கொம்மேஷலில்** பவுண்டன் பேனைகள், பவுண்டன் மைகள் எழுத்துமைகள் றப்பர்ஸடாம் பாட்கள்—மைகள் சீல்மெழுகு, மைக்கூடுவகைகள், பேப்பர்வெயிற் பென்சில் பேனைகள், கொப்பிகள், கணக்குப்புத்தகங்கள் நோட் புத்தகங்கள், சிட்டைப்புத்தகங்கள், கடதாசிவகைகள் டைப்றயிற்றர் றிபன்—காபன்—கடதாசிகள், டுப்பிளிக்கேற்றிங் கடதாசிகள், விதவிதமான என்வலப்புகள், லெற்றர் பாற்றுகள் ஏயர்மெயில் பாற்—என்வலப்புகள், போட்டோ அல்பம், போட்டோக் கோணர், ஓட்டகிராப் அல்பம் ரேயிங் பேனை—மை—கடதாசிவகைகள் குண்டூசி, பேப்பர்கிளிப், மேசைப்பாற்றுகள், பலபலவிதமான—தினிசு தினிசான பைல்வகைகள், ஸபிறிங் பைல்கள், ஒண்டிமான் நோட்டுப்போம்கள் கோட்டுப்போம்கள், வீட்டுவாடகை றிசீற் புத்தகம், சாதாரண றிசிற்புத்தகம் (இங்கிலீசிலும்-தமிழிலும்) இன்னும் வேண்டியஎல்லாத் தேவைக்கும் எல்லாச்சாமான்களும் உண்டு

றப்பர்ஸ்டாம்புகள் ஆடர்களுக்குச் செய்துகொடுப்போம்

**ஒருமுறை** எங்கள் வியாபார—அச்சுவேலைகளில் வந்து கலந்து பழகியவர்கள் பலரும் பலமுறை எங்களிடம் வரும்படி தூண்டிக்கொண்டேயிருப்பது எங்கள் நேர்மையானநடையேயென்பது சொல்லாமலேயே விளங்கும் உண்மை.

உங்கள் யாவருடைய ஒத்துழைப்பையும் வேண்டுகிறோம்

| | |
|---|---|
| COMMERCIAL<br>Press & Stores,<br>30, Main Street, Jaffna. | கொம்மேஷல்<br>பிறெஸ் அன் ஸ்ரோர்ஸ்<br>30, பெரியதெரு, யாழ்ப்பாணம் |